உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# குன்றைத்திரிபந்தாதி.

காரைக்குடி

சதாவதானம்

பாலசுப்ரமண்ய ஐயரவர்கள்

இயற்றியது.

---

காரைக்குடி

சு. ராம. மே.

சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள்

பதிப்பித்தது.

---

1912

1 anna] [அணா 1.

# சிறப்புப்பாயிரம்.



திருவாவடுதுறை ஆதீனவித்வான் திரிசிரபுரம்

மகா-௱-௱-ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

## ஆசிரியப்பா.

திருமாமகளுஞ் சிறந்தவெண் டிங்களு
மொருவாரணமு முயரிருநிதியமுங்
கோட்டிளமுல்லையுங் காட்டரமகளிரும்
வாட்டமற்றண்டர் கூட்டுணுமமுதமுந்
தருகவெனவிரப்பா தாமுணர்ந்தனனே
ரிருகரங்கொளவெலா மீந்தகற்பகமும்
வந்தாருளத்தனு மானைப்பொருளளிக்குஞ்
சிந்தாமணியுஞ் செழுங்காமத்தனுவு
மினையபல்வளனு மீன்றிடுமுத்தி
புனையுடையாகப் பொருந்துபூமகள்
வதனமாவிலங்கு மழவையம்பதியான்
புதனிவனெனப் புலவர்குழாமும்
பார்க்கவனிவனெனப் பார்த்திபர்பலருந்
தீர்க்கமாகன்றுந் திடத்த கல்வியினன்
கைலையங்கிரியிற் கணநாதன்முன்ன
ளயில்லங்கியவே லரசினையளித்தோன்
பருப்பதமயந்த பசுங்கிளிமடநாள்
விருப்பமுற்றணையும் மெய்யுடைவேதியன்
அட்டமூர்த்தம்பெற் றளவிலாப்பேதந்
நட்டறக்காட்டுந் தகையேபோல
அட்டாவதானியென் றுறுப்பெயருமீஇ
மட்டடங்காவவ தானமபுரிவோன்
காரைநகர்க்கொரு கண்ணனவன்பெரி
யோரைவழிபடு முத்தமகுணத்தான்
மறையவர்குலசிகா மணிமறையொருங்கிணுந்
திறனுடைச்சிதம்பர தீக்கிதர்புத்திரன்

தோமிலாட்பால சுப்பிரமண்ணிய
நாமமினவ்வுலகும் நாடியபுகழான்
ஆறம்புலிமுப லனறிவிண்ணிடத்தில்
வீறுடனிருக்கிலோர் விதநோதருமென
ஆன்றோருரைசெய் மாறுமாமுகத்தான்
தோன்றுகுன்றைக்குடித் தொன்னகர்ப்பாலகாத்
திரியந்தாதி செப்பினன்
விரிகலையுணர்ந்தோர் மிகவியப்புறவே.

---

## திருவாமாத்தூர்

### முருகதாச சுவாமிகள் இயற்றியது.

---

### கட்டளைக்கலித்துறை.

---

மன்றையந்தாதிரி லிவ்வந்தாதும்செய்யவ தானமுற்றுந்
துன்றையந்தாதிகந் தோய்செய்முதற்பெயர் சூடினன்பூங்
கொன்றையந்தாதிவர் செஞ்சடையான்கை குவித்துமகிழ்
குன்றையந்தாதி வனைந்தான்மதுரங் கொழித்திடவே.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குன்றைத்திரிபந்தாதி.

## விநாயகர்துதி.

தோடணி யத்த மதிநதி பூண்ட சுடர்பொடியா
வேடணி யத்தழ லெய்தோ னருள்குன்றை வித்தகன்மேற்
பீடணி யத்த மிலகுமந் தாதியைப் பேசவொரு
கோடணி யத்த மதயானை யைத்துதி கூறினனே.

## நூல்.

திருமயி லங்கிரிச் செல்வா கதிரொளி சேர்ந்தழகு
தருமயி லங்கிரி யாக்கரத் தோய்நினைத் தாழ்ந்தெழுந்து
பெருமை யிலங்கிரி யிற்பூசை நேசம் பெருகவியான்
கருமையி லங்கிரி யைப்படி செய்தனன் காங்கயனே. (1)

கயமன தம்பலப் பூம்பொழில் சூழுஞ்சி கண்டிமலை
நயமன தம்பத் துதித்தோன் மருகவென் னுளநின்றருள்
வயமன தம்பலத தாடலுற் றன்பின் வருமுனிக்கா
வியமன தம்படச் செய்தோன் குமார விதம்புரியே. (2)

புரியரிச் சித்தல மேழையு மன்பிற புரந்தகரி
யுரியரிச் சித்த மதலா யெழிற்பொங்க ரூடலைந்து
திரியரிச் சித்த நிகரடி பேற்குநின் சிந்தைமகிழ்ந்
தரியரிச் சித்தர் பணிகுன்றை நாத வருள்பலமே. (3)

பலவரி தான வரைதிரி குன்றைப் பதிவளாவி
மலவரி தான வரையுயிர் போக்கிய மான்முதலாம்
புலவரி தானவ வீரர்முன் னனமெய்ப் போதவன்பர்
சொலவரி தான வமுதே புரிகுவன் றொண்டுனக்கே. (4)

உனவாச் சிரமத்திற் செல்வா யிச்செய்தி யுரைத்தவெலா
மெனவாச் சிரதிபன் பூங்கனற் சாபத்தி லேற்றுமலர்ச்
சினவாச் சிரவிளை நேர்மதி மேவிடிற் சென்றிரிக்கும்
வினவாச் சிரமங்கொள் வேன்குன்றை வேளை மிகநினைந்தே. (5)

மிகவசத் தான கடையேற் கருள்செய் விளங்கியசொன்
னகவசந் தாய்மயிற் பூதரநாயக நாரதன்செய்
மகவசத் தாவி வருமுரு காநின் மலர்ச்சரண
யுகவசத் தானந்த மேவுற நோற்றில னேர்கணமே (6)

கணங்கா தவரை யுழைவள்ளை நூலை நிகர்த்தசெவ்வா
யணங்கா தவரை வளைமாரற் காற்றுவ ளையனையா
வணங்கா தவரை முதலோர் தொழுஞ்சிகி மாமலையாய்
விணங்கா தவரை நகையுகுத் தோன்றந்த விண்ணரசே. (7)

விணிகந் தராசு நிறைபோல ளித்திடும் வேங்கரடி
பணிகந்த ராவண ராக்கதற் காவம் பரத்தினையங்
கணிகந்த ராகவ னேத்துங் குமார கடம்பலங்க
லணிகந்த ராகுன்றை நாதா வெனக்கிங் கருள்கனமே. (8)

கணவா மனத்திரு மாலயன் போற்றுங் கழற்கவுரி
யனவாம னத்தி யதளான் குமார வணிசெய்குற
மினவா மனத்திண் புயமயில் வெற்பநின் மெய்யன்பரைச்
சினவாம னத்தி வணங்கித் துதிக்கின்ற சீரருளே. (9)

சீரங்க மாறன் மருகா மெய்ஞ்ஞானந் திகழ்மறையின்
சாரங்க மாறங் கனுதின மேத்துந் தனிமுதல்வா
வாரங்க மாறணி வாரீன்ற குன்றை யனகருடஞ்
சேரங்க மாறமின் னுக்குங் குகாவருள் செய்நிதமே. (10)

நிதமக னுவய ராம னினைந்தன்பி னிற்றுதித்துக்
கதமக னுவ னகராற் கருள்சிவன் காதலன்மால்
சதமக னுவ லுறப்பணி குன்றையன் சங்கரியற்
புதமக னுவண மாமுத்தி நல்குவன் புன்மனமே. (11)

மனவித னத்தைப்புல் வார்குன்றை வேலரென் மாதுகண்ட
கனவித னத்தை நிகர்களம் பூகமென் காரிகையே
வினவித னத்தை யருந்தச்செய் தந்த விரகிமனந்
துனவித னத்தைத் தவிர்தூது சென்றொரு சூதின்றியே. (12)

சூதார விந்த மடக்குங் குருமுனி தோத்திரஞ்செய்
பாதார விந்த மயின்மலை யாயெழு பாரினுக்கு
மாதார விந்த மணிவா ரருண்முரு கையமராப்
போதார விந்த மடவேற் கருணலம் பொங்கிடவே. (13)

பொங்களை யாரமு தாகச்செய் மாதவன் பொன்மருகா
அங்களை யாரக் கவிசூழ்தென் குன்றைய வன்பினின்ம
னங்களை யாரடி வேண்டுசெல் வாவர னல்கிடுவாய்
திங்களை யாரணி வேணிவைத் தோன்றந்த சிற்பரனே. (14)

பாமரம் பாடழை பாகரன் பாகப் பயந்தகந்தா
சாமரம் பாடரிக் கண்ணார்கள் மோகந் தவிர்த்தருள்க
திரமரம் பாடலஞ் சேர்மயின் மாமலைச் செல்வமென்காற்
பிரமரம் பாடலங் காரத் தொடைகொள் பிரசித்தனே. (15)

சித்தத் தனையுமை யன்போ டுதவிய செல்வனற்றம்
பத்தத் தனையுயர் மெய்த்துணை யாக்கொண்ட பண்பமறை
யத்தத் தனையு மடியார்க் கருசெ யறுமுகவென்
றத்தத் தனையுந் தவிரவந் தேன்மயிற் றண்மலைக்கே. (16)

மலையா ரணியணை மெய்யுடை யாரொளி வாய்ந்தவரைச்
சிலையா ரணியழ வார்மத லாயருள் செய்தளிப்பாய்
கலையா ரணியணங் காக்கின மான்மரு காமணந்தோய்
முலையா ரணியலர் தூவுதென் குன்றை முருகவின்றே. (17)

கவிநா வலவர் வணங்குகுன் றக்குடிக் கந்தநின்று
திவிநா வலவன் முதலான தேவரைச் சிந்தைசெய்யே
னவிநா வலவ ரருந்தானை சோதர வாவினைக்க
தவிநா வலவண் கொடும்பொறித் தானரு டற்பரனே. (18)

பரவையி னஞ்சருந் தெம்மா னருள்குன்றைப் பன்னிருசெங்
கரவையி னஞ்ச ருவணர்சின் றேத்தெழிற் காங்கயசின்
வரவையி னஞ்சரு காயுமெய் காண்கிலம் வந்தருளாய்
தரவையி னஞ்சருஞ் சூர்மாய வேவுஞ் சதானந்தனே. (19)

ஆனந்த வங்கண னந்தரி தந்தரு ளையகுற
மானந்த வங்கய னையருங் காவலில் வைத்தகுகா
கூனந்த வங்கயன் மாறற்குத் தீர்த்த குமாரவெனத்
தானந் தவங்கள் புரிந்தே மயின்மலை சார்ந்தனமே. (20)

தனந்தா னியமலி யச்சேர்த் திருட்பவ சாகரத்தின்
மனந்தா னியம மறந்தலை யாத வகையருளாய்
சினந்தா னியமனைச் செய்தோன் குமார திரண்டொலிக்கு
மினந்தா னியமடங் குஞ்சிகி வெற்பி லிருப்பவனே. (21)

இருக்கோ தயாபர னென்றேது முன்றனை யேதுன்மன
முருக்கோ தயாக்கலை மின்னுள்வின் மாறு னுயர்முரசின்
பெருக்கோதை யாலலைந் தாளிதை நீகண்ட பின்னுமரா
மருக்கோதை யார்புய மேவாதென் றேகை மலைக்குகனே. (22)

மலையக லாதனன் சேயேமெய்ஞ் ஞான மலிகருணை
நிலையக லாத வடியேற் கருள்புரி நீள்கொடிச்சே
வலையக லாதர நேருஞ சடானன வாய்மைதிகழ்
கலையக லாத மயில்வரை யாயிநதக் காலத்தினே. (23)

காலனை யாதிகல் காலையிற் சிந்தை கலங்கியந்தப்
பாலனை யாதிருப் பாதந்தந் தாளெனப் பண்டருளுஞ்
சீலனை யாதிரை நாளா னுதவுந் திருக்கைவடி
வேலனை யாதி மயிற்பொருப் பானை விரும்பினமே. (24)

விருச்சிக ராசிக்கைந் தோனென வேலையில் வேலைவிட்ட
திருச்சிந ராலைபத் தென்குன்றை யாயெனத் தேர்ந்தடியி
லருச்சிக் காசல நேரைம் புலனை யடக்கிமிகக்
கருச்சிக ரவைவென் றேன்பத நேர்வருங் கன்மனமே. (25)

மனவர தம்படப் போரிற் கதிர்மறை மான்மருகா
சொனவர தம்ப கழிநேர் விழிவள்ளி தோய்சகன்மோ
கனவர தம்பரி கைம்மலை யாளுடைச் க்நதநிற்கே
யனவர தம்பணி செய்தே னருள்குன்றை யாளரசே. (26)

அரசா தவஞ்செய்கி ரீடியஞ் சேலென வாண்டவரப்
பிரசாத் வம்பல வாணர்மைந் தாகுறப் பெண்கணவா
புரசாத வன்பதி தோய்மயின் மாமலைப் புண்ணியகிற்
பரசாத வம்ப னெனையாண் டருள்கற் பகப்பலமே. (27)

பலசங் கரப்பரை வாட்டுதல் கண்டு பரிந்தருள
கிலசங் கரப்ப வளவனை தந்தசெங் கேழ்க்குமரன்
வலசங் கரப்பணி பூட்டிந டாத்து மயின்மலையான்
சலசங் கரப்ப வொளிர்பதத் தாலயற் றூக்கினனே. (28)

தாக்கி னடந்தழை வெங்கய மாமுகன் றன்னுயிரை
நோக்கி நடந்தழை வேற்குன்றை யாயெழி னூபுரத்தா
ளோக்கி நடந்தனைச் செய்கயி லாயத்தர் தொன்மறைதேர்
வாக்கி னடந்தனை யாயெளி யேற்கருள் மாதவமே. (29)

மாதனங் காக்குந் திசாபதி யாமென மாழ்கிமலர்
வேதனங் காக்கும் பிறவிக்குள் ளீரென்றும் வேண்டுமெவ்வி
ராதனங் காக்கும் படிமுடித் தோன்பணி நாடொறுஞ்செய்
போதனங் காக்குலஞ் சேர்குன்றை நாயகன் பூங்கழலே. (30)

பூங்கத் திகைக்குறு மோன்னர் வணங்கு பொதியவெற்பன்
றூங்கத் திகைக்கு மரனு ரருள்குன்றைச் சண்முகனே
தேங்கத் திகைக்குழல் வள்ளிபங் காநமன் செய்யதண்டா
லோங்கத் திகைக்கும் பொழுதாளு நின்ற னுடம்பிடியே. (31)

உடம்பனை வேமக் கருச்சேர்ந் திடாம லுயர்வினதாய்
மடம்பனை வேதனஞ் செய்வித் துயர்ந்த வரிசையொடு
வடம்பனை வேய்புடை சூழ்குன்றை மாநகர் வாழ்குகனைக்
கடம்பனை வேலனைக் கந்தனைப் போற்றிக் கவிசொன்மினே. (32)

கவித்தார மாகர் வணங்குகுன் றைக்குடிக் கந்தர்மை
லவித்தார மாகப் பசப்பொழித் தாரது வன்றிவிஞ்சை
செவித்தார மாகத வைத்திர வென்றெனைச் சேர்ந்துசெஞ்சொற்
சவித்தார மாக வுரைத்தார் மகிழ்ந்து தனித்தெனக்கே. (33)

தனிச்ச மனையதி வேகமுற் றுடெழிற் றையலர்க்
ளனிச்ச மனையபொற் பாதங்கள் வேண்டின மன்பொடுவே
சனிச்ச மனையரி தாங்குன்றை யாயெனத் தாழ்ந்துருகே
மினிச்ச பனையச் செயுந்ததி மேலிடி லென்செய்வமே. (34)

என்பர வங்கம் புனைந்தே ரருண்முரு கேசதிரு
முன்பர வங்கம் பியற்றெழிற் குன்றை முதல்வகுற
மின்பர வங்கவென் னுளுநின் சீர்த்தி விளம்பியெய்
யன்பர வங்களின் தாள்வோ யகற்றென் னலைபிறப்பே. (35)

அலையா மனதி னிடமொழிந் தாள்குன்றை யாயெனவுஞ்
சிலையா மனமதி யாதிருந் தாய்செழுஞ் செப்பணைய
முலையா மனமதி யாவ்விற் புல்லு முருகநல்ல
மலையா மனமதி சேகரர்க் கின்பஞ்செய் மாமுதலே (36)

மாமுரு காதவர் நாயக மேமட வார்க்கிரங்கி
னாமுரு காத வனைகடருள் வாயொளி நண்ணுமயி
லாமுரு காத வனைமே ருமைதனை யாபொழிற்பூந்
தேமுரு காதவன் மேர்மேவு மஞ்ஞைச் சிலம்பினனே. (37)

சிலம்பக மஞ்சரித் தண்டலை சூழ்குன் றைத் தேவமென் கூ
கலம்பக மஞ்சரி நேர்வள்ளி நாயக சார்பிலரை
வெலம்பக மஞ்ச ரிளையமைந் தாவென வேண்டிமடல்.
சுலம்பக மஞ்சரி சொல்வீர் பிறரைக் கருதலற்றே. (38)

கருமா லையனைய வாகமுற் றன்பு கதித்தெழுந்த
திருமா லையனைய நாயடி யேன்புரி தீமைநெஞ்சப்
பெருமா லயனைய நீயருள் குன்றையிற் பேணிவளர்
தருமா லயனைய மாமயின் மேலவந்து சந்ததமே. (39)

சந்தனக் காவளர் தென்குன்றை மாநகர் தங்கியவேற்
கந்தனக் காவன் மிகவணிந் தோன் பெற்ற காதலன்சீர்
தந்தனக் காவடிக் கிச்சைகொண் டோனலர்த் தாரணிபு
யந்தனக் காவனி தைமைபல் கூர்ந்த கறைபிரவே. (40)

இரதவிக் காமடற் சாபத்தி னுணளி யேற்றினன்வா
தரதவிக் காம னனைவாய் மயிற்கிரி தங்கியவேல்
வரதவிக் காமய மேவாம லன்பர் மனங்கலங்கிப்
பரதவிக் காம லுயர்கதி நல்கும் பதாம்புயனே. (41)

பதஞ்சலி யாதி முனிவோர்கண் மேன்மைப் பதவிபெற
நிதஞ்சலி யாதிரு தாடொழுங் கோன்றந்த நின்மலவி
ரதஞ்சலி யாதிருப் பென்றுரை வென்ற பிரான்கரத்தி
னதஞ்சலி யாதிற் செயப்பெறுங் குன்றை யமரரசே. (42)

அரவத் திரம்பொடி யாக்குவ னன்புக மூர்திபரா
பரவத் திரவி குலராம னன்பிற் பரசியமா
திரவத் திரமணி வெள்விடை யான்றந்த சின்மயச்சிந்
துரவத் திரர்துணை யாங்குன்றை யாயருள் சூதின்றியே. (43)

சூதங் கமுக மராமுயர் குன்றைத் துரந்தாவென்
னுதங் கமுக மலரடி தந்தரு ளன்பாரு
ளேதங் கமுக மனவில்கந் தாவொற்றை யேர்மருப்பின்
மாதங் கமுக மணிக்கிளை யாய்நல் வளம்பெறவே. (44)

வளமையி லாத வனக கிகரிந்த வாழ்க்கையத
னுளமையி லாத வனகமென் முருகு முனித்துதிமஞ்
சுளமையி லாத வநகறி வாளர்கள் சூழ்ந்துதுதி
விளமையி லாத வநகர்குன் றாயுறை வீரவென்றே. (45)

வீரகண் டாமணி வேய்ந்த பதாம்புய விள்ளருமெய்ச்
சீரகண் டாமணித் திண்புய வேல சிவன்றருகு
மாரகண் டாமணி வாய்க்குற மாது மகிழ்ந்தணையுந்
தீரகண் டாமணித் தாமெமைக் காத்தரு டீங்கறவே. (46)

நீங்கால மந்தரக் கந்தரஞ் சேர்த்த சிவபெருமா
னுங்கால மந்தர மாங்லந் தீவடி வானபரன்
சாங்கால மந்தர திக்கொண்கற் கிட்டவன் றந்ததண்டைப்
பூங்கால மந்தரத் தோட்குன்றை யாயருள் போதத்தையே (47)

போதத்தந் தத்தன மென்னடை யென்னப் பொருந்துகுற
மாதத்தந் தத்தனஞ் சேர்முரு காகுன்றை மாநகர்வாழ்
வேதத்தந் தத்த நதிமத லாயுயர் வீடருள்செய்
வாதத்தந் தத்தன வென்றுடு மாமயில் வாகனனே. (48)

கனவிய முத்தமி ழோடிசைத் தார்க்குங் கலையுறுஞ்சோ
மனவிய முத்த மிளிர்வயற் குன்றைப வாரணக்கே
தனவிய முத்த மிடுங்குறத் தாய்க்குணை தன்மையென்று
வினவிய முத்தர்க் கருள்வோ யகற்றேன் விதனத்தையே. (49)

நத்தரி யஞ்சங்க டவயன் பூமி நடுங்குதென்பக்
கத்தரி யஞ்சங்க ழலார் துதிசெயுங் கந்தநின்சீர்
வித்தரி யஞ்சங்க மேவிலம் யாமெவ் விதமுப்குவேம்
பத்தரி யஞ்சங்க மார்க்குந்தென் குன்றைப் பதிக்குருவே .(50)

குருந்தா ரகனய மாவார்தென் குன்றைக் குமரமராப்
பெருந்தா ரகனை யரிவிட முண்டபெம் மான்புதல்வா
திருந்தா ரகனைப் போர்புரிந் தேயரித் தேரின்மிசை
வருந்தா ரகனே யழித்தோயென் றென்றும் வழுத்துவனே. (51)

வழுத்தஞ் சுகணை யனரிபின் சேயடி வாழ்த்திமனத்
தழுத்தஞ் சுகமெய்த் திருநாம மோதில மைந்தருக்கள்
பழுத்தஞ் சுகமுணச் செய்குன்றை சேர்கிலம் பற்றிநம
னிழுத்தஞ் சுகரப் படைகொண் டிடுக்கி லிரங்கன்மெய்யே.(52)

இரப்பா ரகங்கயி லாயத்த ரோது மினியவரைப்
புரப்பா ரகங்கையிற் காபாலி மேனி பொடிநிறைந்தோர்
வரப்பா ரகங்கைய ரீன்றகுன் றைப்பதி மன்ன விண்ணோர்
சுரப்பா ரகங்கைத் தவாதவிர்ப் பாயென் றுளக்கத்தையே. (53)

துளபத் தனந்தன் மருகாநின் பாதத் துணை தனிலன்
புளபத் தனந்தமிழ்ப் பாவுரைத் தேனதி லுண்மையெனக்
கொளபத் தனந்தப் புரிந்தெனை யாண்டருள் கோலவள்ளி
களபத் தனந்தழு வுங்குன்றை யாய்தண்டைக் காலளித்தே (54)

காலத் தனுமனை யான்விடு தூதருங் கண்டகல்வர்
தூலத் தனுமனை யான்மைந்தர் யாமெனுந் தோற்றமறுஞ்
சீலத் தனுமனை யாண்டவன் சூழ்குன்றைத் தென்னகர்வாழ்
வேலத் தனுமனை யாகிவந் தீந்திடில் மெய்வரமே. (55)

வரதா ரமணிய மாமயி லோங்கலில் வாழ்கருணை
கரதா ரமணிய மங்கெடச் செற்றசிங் காரதுரந்
தரதா ரமணி யகமகிழ் சேவ தமியற்கின்று
வரதா ரமணியல் தீரெனப் பாடுவன் பாதயந்தே. (56)

பானலங் கண்ணியர் செவ்வாய்க் குருகிப் பருகிவெறுங்
கானலங் கண்ணிய மான்போற் றிரிந்த கடையற்கின்பந்
தானலங் கண்ணிய மாமுனி வோரினஞ் சார்குன்றையாய்
வானலங் கண்ணிய மாப்பெறு வோனசொல் வடிவினனே. (57)

வடியம ணங்கரு காவணி மேவி வயங்கனல்விண்
நெடியம ணங்கமுற் றுனோய் மயின்மலை நின்றமல
ரடியம ணங்கம ழுங்கடம் பாசின்னை யாதரவாய்
மிடியம ணங்கழி யப்புரி யென்ன விரும்புவனே. (58)

புவனத் தினமலை யாதரு ளாய்மணம் பூண்பதற்குத்
தவனத் தினமலை யாகாத் தீனற் சரவணப்
வவனத் தினமலை யார்தடஞ் சேர்குன்றை வாசவென்றன்
கவனத் தினமலை யாடகிழ் விக்குஞ்சி காமணியே. (59)

காமனத் தம்பல தந்தாலு மேவக் கருத்தலைமயா
ளாமனத் தம்பல மாமுலை சேர்ந்தரு ளார்சடையைச்
சோமனத் தம்பல வாணர்மைந் தாதொழுந் தொண்டர்கமுந்
நாமனத் தம்புல காரஞ்செய் வேன்மயி லுகைத்தனை. (60)

நாகமத் தாற்றிரு வாழி கடைந்தெழு நஞ்சினுண்டாஞ்
சோகமத் தாதிரி யென்னுமவிண் ணோர்க்கருள் சோதிமைந்தா
பூகமத் தாதியை சண்பக மார்மயிற் பூதரத்து
ளாகமத் தாதி முடிவோயெற் காத்தரு ளாவல்வைத்தே. (61)

ஆவலி னுகமந் தேர்முனி வோர்களுக் கன்றுதவு
மாவலி னுக வுலகிற் புகச்செய்யு மான்மருகா
காவலி னசைர் பூண்முலை தோயெழிற் கந்தகொடிச்
சேவலி னுதிர் வேலா மயூரச் சிலம்பினனே. (62)

சிலவா கடங்கண் முதலான நூல்க டினம்படித்துப்
புலவா கடங்கதித் தோங்கிய வோங்கலைப் போன்றமனம்
பலவா கடங்கப் படாதத னுலெழில் பாவுகுன்றை
வலவா கடங்கண் முலைபாக னேயென் வளம்பெறவே. (63)

வளக்கலக் கஞ்ச முகைநேர் முலையின் மயில்வரையோய்
பிளக்கலக் கஞ்சர மாரனெய் தானந்தப் பெற்றியினு
ளுளக்கலக் கஞ்சகி யாதவ ளாகி யுறுந்துயர
மொளக்கலக் கஞ்சசி வேணியர்க் கோது மிருதியனே. (64)

மிருகந்த னுதர விறறரும் பூங்கொடி மேவுபுயா
பெருகந்த னுதவற் காண்டலை நேருநின் பீடன்பர்கண்
டுருகந்த னுணவில் பான்மை சிகாவள வோங்கன்மிசை
வருகந்த னுத மகிழ்ந்தருள் வாய்குண வாரிதியே. (65)

வாரிய மானந்த மார்த்திடுங் குன்றை மகிமையைவி
சாரிய மானந்த மாகத் தரணி தனிலிது தான்
காரிய மானந்த மாழ்பவந் தீர்க்கக் கடம்பனன்றி
யாரிய மானந்த மாகப் பிறவி யனத்தநெஞ்சே. (66)

அனவே தனைய மகிலார் திருக்குன்றை யாளிறைவா
வெனவே தனையறி ஞானமுண் டாமவர்க் கெஞ்சலஞ்சுங்
கனவே தனையர் கருக்குழி யேது கலக்கமுறு
மனவே தனையறுத் தானந்தஞ் சேர்வர்பெண் மாயமற்றே. (67)

மாயத் திரியம் பனவிழி யானைத்திம் மாநிலத்தில்
வியத் திரியம் பணிபுரிந் தேகுன்றை மேவிளம்பூந்
தூயத் திரியம் பரமுனி வோர்க டொழுதெழுங்கை
லாயத் திரியம் பகனருள் சேய்மறை யந்தணனே. (68)

அந்தக் கையிலையில் வாசனம் மாலய னார்தமக்கும்
முந்தக் கையிலை யிதழிய னீன்ற முருகனை
விந்தக் கையிலையி லுற்றசெவ் வேளென் வேண்டிவினை
சிந்தக் கையிலை யினிதுறத் தோகைச் சிலம்பிடத்தே. (69)

சிலவரைக் காசுங் கனிந்துத வார்தமைச் சேரனென்றும்
பலவரைக் காசு செயுமிந் திரனென்றும் பாடிநைவீர்
நலவரைக் காசகத் தோலா ரருள்குன்றை நாதரவுண்
குலவரைக் காசக மெய்தோர் புகழ்சொன்மின் கோதறவே.(70)

கோதக ஞாத மோர்வது போலிக் குவலயத்தில்
மாதக ஞாத ஞதியர் தாழ்குன்றை மன்னவருள்
வேதக ஞாத மீதேறு தாரக வீரனெனும்
பாதக ஞாத மாகச் சமர்செய் பலத்தினனே. (71)

பலகலை யாயு மளவினை நாடொறும் பற்றிநெஞ்சே
யுலகலை யாயுனக் கோதினன் குன்றை யுறைகுகனை
நலகலை யாயுத ரத்துதி மாதென்ன நாட்டெழின்மா
விலகலை யாயுற் றிடுபவந் தீர வினிக்கருதே. (72)

கருங்கா வியமழி கட்குற மானனை காங்கயன்மேற்
பெருங்கா வியமகிழ் வாய்நவின் றேற்குப் பிழைபியற்றன்
மருங்கா வியம மதிமதி சண்முகன் வாழ்ந்தனன்சீர்
திருங்கா வியமலி குன்றையைப் போலெனெஞ் சத்தடத்தே(73)

தடக்கல வாம முலையுமை பாகத்தர் தந்தகந்தா
வடக்கல வாமதிப் பூங்குடை யார னலர்க்கணையை
யிடக்கல வரமயில் வெற்பா வருந்து மிவளைநாம்
படக்கல வாம லிருந்தால் வெருவும் பலிமதிக்கே. (74)

பணிமதிக் குஞ்சணி வானருள் குன்றைப் பதிமருவும்
கனிமதிக் குஞ்சரி நாயக நின்னைக் கருதுநன்னே
யனிமதிக் குஞ்சசி போகந்தன் வாழ்வு மணைதலின்றி
நனிமதிக் குஞ்சர ணந்தா சுரகின் னரர்க்கரசே. (75)

நரசங்கை யங்க கலவா வியநட நங்கையாற்
பாசங்கை யங்கச னைப்பொடித் தோன்றந்த பாலனைவார்
முரசங்க யங்கனைத் தார்குன்றை மேவு முருகனைச்சீர்
வரசங்கை யங்காத் தான்மரு கோனைச்சொல் வாட்டமுற்றே(76)

வாட்டந்த காரத் திடைத்தோன் றிளம்பிறை வாயெயிற்றுக்
கோட்டந்த காவி போற்கண் சிவந்து குறுகலென்முன்
சேட்டந்த காரகஞ் செல்லாத் திருக்குன்றைச் சேயெனக்குத்
தாட்டந்த காரணங் கண்டுகொ ளுய்விதந் தான்றெரிந்தே. (77)

தெரியா தனத்தி னடையாளில் வாய்வழிச் செல்லலிஞ
சரியா தனத்திறை விண்ணுட் டரசன் சதுமுகன்சீர்
பிரியா தனத்தின னேத்தெழிற் குன்றைப் பெரும்பதிவா
ழரியா தனத்திமைந் தாசெழு மாமறை யந்தத்தனே. (78)

அந்தரங் கத்தி னமலைமைந் தாவென வன்பினனே
கந்தரங் கத்தி னமவெனிற் குன்றையைக் காப்பவர்மோ
துந்தரங் கத்தி னமளியன் றுழுந் துணைப்பதத்தா
வந்தரங் கத்தி னமர்பிணி தீப்பர் நலங்கொடுத்தே. (79)

கொடுங்கால னஞ்ச மலர்த்தா ளெடுத்த குரிசிலண்டர்
நடுங்கால னஞ்ச மருந்தா னின்றரு ளுதனைச்சேய்
படுங்கால னஞ்சல சந்துயில் குன்றைப் பானெநெஞ்சே
நெடுங்கால னஞ்சன னந்தீரென் றுயிதென் னின்மதமே. (80)

மதனத் தயலே யுறச்செயும் போதெழு வல்விடத்தாம்
விதனத் தயலைத் தமாரைக் காத்த விமல்னிளஞ்
சுதனைத் தயலே கிகர்களங் கூந்தன்மென் றேள்பணைத்தோங்
குதனத் தயலே யனேகுன்றை யாய்மதன் கொல்லுமுன்னே. (81)

கோலவஞ் சினையங் கசனேவு மென்னவுட் கொண்டுவெளிச்
செலவஞ் சினையன மேயிதை யோதுவன் சென்றிமையா
சலவஞ் சினையம் பெறுவோன் மகிழ்வுறத் தாரகையைப்
பலவஞ் சினையடர்க் குங்குன்றை வாழ்மயில் பாகனுக்கே. (82)

பாகன வாசகப் பூங்கிளி வள்ளி பதமிறைஞ்சு
மாகன வாசிதோய்மயிற் பூதர மன்னுசகன்
மோகன வாசவ னுர்துதி யன்பின் மொழியுமயில்
வாகன வாசகி யேனனல் போல வருமந்தியே (83)

அந்திளைக் காதரம் பேசிக் குறக்குல வம்மையிரு
பந்திளைக் காதடர் பூண்முலை தோய்கடம் பாமணங்கொள்
சந்திளைக் காதடஞ் சூழ்குன்றை யாயிச் சகவிடையம்
புந்திளைக் காதருள் வாய்நின் சரணவம் போசத்தையே, (84)

போசனந் தானஞ் செனக்கொண் டயின்ற புராரியரு
ணேசனந் தான மிதுவெனக் குன்றையை நேடிமல
ராசனந் தானக் களிறுடை யான்றெழு மாதிமுரு
கேசனந் தானலர் தந்தான் சிகண்டி யெருத்தமுற்றே. (85)

எருக்கப் பவனி தரித்தோ னருள்முரு கேசநன்மாந்
தருக்கப் பவனியி னின்றோங்கு குன்றைச் சடானனவன்
பருக்கப் பவனி தையர்முத லாயபல் லோர்களையு
முருக்கப் பவனி வருவோ யருளென்ப ரும்பருமே. (86)

உம்பர மானவர் தாழ்மஞ்ஞை வெற்பி லுவந்துறையு
மெம்பர மானவ மன்மத னெணழி லெங்கையென்மி
னம்பர மானவ மாமென நீள்கண் ணரிவையர்தம்
பம்பர மான வனமுலை தோயிற் பலனில்லையே. (87)

பலமா தவரை யுடைத்தா மருளெம் பாமரென்றுஞ்
சிலமா தவரைப் புரந்தகுன் றைக்குடிச் செல்வரென்று
மெலமா தவரை யினைக்குமுன் சென்று விரைந்தனங்கா
நலமா தவரை வளைத்தாய்நொந் தாளிந்த நாட்கம்பித்தே (88)

கப்பிக்கை யானந்த மாவெடுத் தோன்றந்த கந்தர்குன்றைத்
தும்பிக்கை யானந் துணைவர் வருமெனத் தூதிசொன்ன
நம்பிக்கை யானம் முயிர்தரித் தேமிற்றை நாண்மதன
னம்பிக்கை யானந் திடவளைத் தானில் வலம்பெரிதே. (89)

பெரும்பன்ன கத்தினன் சொல்குன்றை யாய்பிணி நாண்மதமா
சுரும்பன்ன கத்தினங் கொள்மதன் றீந்திடச் சுட்டவன்று
னரும்பன்ன கத்தி னரக்கற்செற் றுன்மத லாய்விரைந்தா
ளிரும்பன்ன கத்தி னமனத் தவாவெண் ணடினெடிதே. (90)

நெடுங்காத மன்று மயிற்கிரி செல்லுதி நீவிழிபோ
ரிடுங்கா தமர்வள்ளி நாதவென் றோத லிலாதிருக்கி
னடுங்கா தமர்புரி கூற்றுவன் றூதுவர் நண்ணிநின்று
சுடுங்கா தமணிவ னென்பர்நம் மேன்மை சுருங்கிடவே. (91)

சுரும்பர் தவர நிகர்விழிக் குஞ்சரி தோய்புயனைக்
கரும்பர் தவனை வென்றோன் றருதுன்றைக் கந்தனையுள்
விரும்புந் தவர திருக்கைசெல் வேலந்துணை வெவ்வினைமு
திரும்பந் தவானே யென்பேநஞ் சிந்தைத் திறந்துடுக்கே. (92)

துடிக்கடுக் குஞ்சொற் பரத்தையர் மையலிற் றோய்ந்துழல்வீ
ருடுக்கடுக் குங்காத் தெம்மான் புகழ்மயி லோங்கல்சென்று
கடுக்கடுக் குங்கணை வெம்பிணை வண்டு கதிரயின்மா
வடுக்கடுக் குங்கள் மணாளனை வாழ்த்து மதங்கலைத்தே. (93)

கலையர யன்றரு வைந்தேர்ன் றிகிரிக் கரனிலையா
னிலையர யன்றரு ளென்றேறு நந்துதி நீள்சடைமீ
தலையர யன்றரு ஞாசல மாய்கின்ற வத்தரைத்தோய்
சிலையர யன்றரு மின்றரு குன்றையங் தேவினுக்கே. (94)

தேவிக்கத் தக்க னவமானஞ் செய்த செயலைக்கண்டு
கூவிக்கத் தக்கரு ளந்தணர் மேலன்பு கூர்ந்தளித்த
மாவிக்கத் தக்க மலற்கரி யீன்ற மயில்வெற்பனைச்
சேவிக்கத் தக்கமெய்ப் போதமுண்ட ரங்தொழுஞ் சீவர்களே. ()

சீவன மான் தனுதின முன்பெயர் செப்பவரங்
தாவன மான தரமார்ந்த குன்றைச் சடானனபூங்
காவன மான தவாவியன் றூழ்குழ காபதித
பாவன மான தாருவங் தேத்தெம் பரம்பரனே. (96)

பரகதிக் காமுக னீயேயென் றன்பர் பணிந்தணியா
முரகதிக் காரெனுங் கோமா னருள்குன்றை யுத்தமன்மேல்
விரகதிக் கார்குழல் கொண்டதை யோர்கிலை வீரமெல்லாங்
கரகதிக் கான்மயில் வந்திடுஞ் சீதக் கலாமதியே. (97)

சீதக் கலாமதி தோய்குன்றை யாயுன் றிருப்புகழை
யோதக் கலாமதி நெஞ்சமன் பாயுனை யுன்னலிலா
வேதக் கலாமதி பாவியென் றெண்ண லெமன்வந்தெனைக்
காதக் கலாம தியற்று தருள்தண்டைக் காலளித்தே. (98)

காலா வலையத் தமியேனைச் செய்யிலிக் காசினியிற்
பாலா வலையத் தரக்கனை யாவி பறித்ததிரு
மாலா வலையத்தற் கீந்தசெவ் வேள்பணி வண்குன்றையான்
வேலா வலையத் தயில்விடல் போற்கொல்வன் மெய்யிதுவே. (99)

மெய்யகத் தானந்த மாயடி யேற்கருண் மேவுவையம்
வையகத் தானந் தனமதி யானன மான்மகள்சே
ரையகத் தானந்தல் கண்டவை காத்த வரிமருகா
செய்யகத் தானந் தடர்குன்றை யாய்நின் றிருவடியே. (100)

